# இந்திப் பிரச்னை



பாரதம் நமது தாய்நாடு. காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி வரை உள்ள நாமனைவரும் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள், நமது இதிகாசங்களும், பண்டைய கலாசாரங்களும் நம் நாட்டின் ஒருமையைப் பறைசாற்றுகின்றன. நாம் வளமாகவும், வலிமையாகவும் வாழ இந்த ஒருமை மிகவும் அவசியம்.

பாரத நாட்டின் ஒருமையை உறுதிப்படுத்தும் ஒரு கருவியாகவும், பல்வேறு பேத வேற்றுமைகள் கொண்ட நாற்பத்துநான்கு கோடி மக்களை இணைக்கும் ஒரு சக்தியாகவும் விளங்கக்கூடியது இந்தி மொழி.

பெரும்பான்மையான மக்கள் அறிந்துள்ள மொழியே, ஒரு நாட்டின் ஆட்சிமொழியாக இருக்கவேண்டும். அப்போதுதான் உண்மையான ஜனநாயகம் நிலவும். இந்தியாவைப் பொறுத்தவரையில் ஆங்கிலம் மிகக் குறைந்த எண்ணிக்கையுள்ள மக்களாலேயே பேசப்படுகிறது. நிச்சயமாக இந்தியாவின் எந்தப் பகுதியிலும் அது பாமர மக்களின் பேசும் மொழியன்று.

இந்தி மொழி பாரதநாட்டில் பெரும்பான்மையான மக்களால் பேசப்படும் மொழி. தமிழகம், வங்காளம் போன்ற பிற மாநிலங்களிலும் அம்மொழியை இலட்சக்கணக்கான

வர்கள் அறிந்துள்ளனர். எனவே, இந்தி மொழி மத்திய ஆட்சிமொழியானால்தான் ஜனநாயக உணர்வுகள் மதிக்கப்படுகின்றன என்ற நிலைமை ஏற்படும்.

கீழ்க்கண்ட விவரங்களைத் தயவுசெய்து பாருங்கள். மிகப் பெரும்பாலான மக்கள் அறிந்துள்ள மொழி எது என்பது புலனாகும்.

## மொழிவழி மக்கள் தொகை

(1951-ல்)

| வரிசை எண் | மொழிகள் | மக்கள் தொகை (கோடிக்கணக்கில்) | சதவிகிதம் | குறிப்பு |
|---|---|---|---|---|
| 1. | ஹிந்தி, உருது, ஹிந்துஸ்தானி, பஞ்சாபி. | 14·99 | 42·0 | இந்தி, மராத்தி, வங்காளி, குஜராத்தி மொழிகளின் எழுத்துக்கள் அனைத்தும் ஏறக்குறைய வரிவடிவம் கொண்டவையே. |
| 2. | தெலுங்கு | 3·30 | 9·2 | |
| 3. | மராத்தி | 2·70 | 7·6 | |
| 4. | தமிழ் | 2·65 | 7·4 | |
| 5. | வங்காளி | 2·51 | 7·0 | |
| 6. | குஜராத்தி | 1·63 | 4·6 | |
| 7. | கன்னடம் | 1·45 | 4·1 | |
| 8. | மலையாளம் | 1·34 | 3·8 | |
| 9. | ஒரியா | 1·32 | 3·7 | |
| 10. | அஸ்ஸாமி | 0·50 | 1·4 | |

ஆங்கிலம் நமக்கு அந்நிய மொழி. அதை ஆட்சிமொழியாக என்றென்றும் வைத்திருப்பது மக்களது தேசிய உணர்ச்சிகளை அவமதிப்பதாகும். உலகிலுள்ள எந்த ஒரு தேசமும் பிறநாட்டு மொழியை ஆட்சிமொழியாகக் கொண்டிருக்கவில்லை. அதே சமயத்தில், ஆங்கிலம் ஆட்சிமொழியாக இல்லையானாலும் அதன் முக்கியத்துவம் குறைந்திடாது. உலகத் தொடர்புகளுக்கு, இன்றைய நிலையில், ஆங்கிலம் அவசியம்; அதைப் புறக்கணிப்பது என்ற பேச்சுக்கே இடமில்லை. இதன் அவசியத்தை உணர்ந்தே அதற்கு முக்கியத்துவமளித்து வருகிறோம்.

தமிழகத்திலும் மற்ற இந்தி தெரியாத மாநிலங்களிலும் உள்ளவர்கள் தனித்து வாழ்பவர்கள் அல்லர். சென்னையிலுள்ள வியாபாரிக்கு டில்லியில் கிளை அலுவலகம் இருக்கிறது. கோவையிலுள்ள வாணிப நிறுவனத்திற்குப் பஞ்சாப்பில் வாடிக்கைக்காரர்கள் இருக்கிறார்கள். திருச்சியில் தயாராகும் கருவிகள் உத்திரப்பிரதேசத்தில் விற்பனையாகின்றன. தமிழகம் உற்பத்தி செய்யும் கைத்தறி ஆடைகள் வடஇந்தியா பூராவும் விற்கப்படுகின்றன.

வாணிபத்திற்கும், வியாபாரத்திற்கும், அவை சம்பந்தமான தொடர்புகளுக்கும் மொழி வேற்றுமை குறுக்கிடக்கூடாது. நமக்கு இந்தி மொழி தெரிந்திருந்தால் இந்த வகையில் மிகவும் அனுகூலமாக இருக்கும்.

அரசாங்க உத்தியோகங்களில், தமிழர்கள் இல்லாத மாநிலங்கள் இல்லை. மத்திய, மாநில அரசாங்க உத்தியோகங்களிலும் பிற தொழில்துறைகளிலும் பல இலட்சக்கணக்கான தமிழர்கள் இந்தியாவெங்கும் பரவியிருந்து வருகின்றனர். இந்தி மொழியை நன்கு பயின்றால் இந்த வேலை வாய்ப்புகள் இன்றும், எக்காலத்திலும் பெருகி வாழ்க்கைக்குத்

துணையாக அமையும். இன்றும், இந்தி தெரியாதவர்கள் பிற மாகாண மக்களுடன் தொடர்பு கொள்வதில் பெருஞ் சிரமப்படுவது கண்கூடு.

இந்தியைப் படிப்பது அப்படி ஒன்றும் மிகச் சிரமமான காரியம் அன்று. இந்தி மொழியிலுள்ள பல சொற்கள் தமிழ், தெலுங்கு, வங்காளி போன்ற மொழிகளில் விரவிக் கிடக்கின்றன. பெங்களூரில் ஒருமுறை காந்தியடிகள் இந்த உண்மையைச் சுட்டிக்காட்டி இந்தி மொழியைப் பயிலுவது சுலபம் என்று விளக்கியிருக்கிறார்.

இந்தி கற்பது சுலபமாக இருப்பதற்குக் காரணம், அது இந்திய மொழிகளிலே ஒன்றாக இருப்பதுதான். ஆங்கிலம் அவ்வாறு இல்லை. அதைக் கற்பது சிரமம்.

காங்கிரஸ் மகாசபை இந்தி மொழியைத் திடீரென்று புகுத்தவில்லை. பல ஆண்டுகளுக்கு முன்பு, சுதந்திரப் போராட்டக் காலத்திலேயே, காந்தியடிகளின் சீரிய தலைமையில் இந்திதான் இந்தியாவின் ஆட்சிமொழி என்பதை அது ஒப்புக்கொண்டுவிட்டது. காந்தியடிகளின் திட்டங்களில் இந்தி மொழியைப் பரப்புவது முதலிடம் பெற்றது.

இந்திதான் இந்தியாவின் ஆட்சிமொழியாக இருக்கவேண்டும் என்பதை காங்கிரஸ் மகாசபை பலமுறை தேர்தல் பிரகடனங்களில் அறிவித்திருக்கிறது. மிகப் பெரும்பான்மையான மக்களின் ஆதரவைப் பெற்றிருக்கிறது.

உண்மை இவ்வளவு துல்லியமாக இருந்தும், சில எதிர்க்கட்சியினர் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியில் ஈடுபட்டு மக்களைக் குழப்ப முயலுகின்றனர். மொழிப் பிரச்னையில் அவர்களுக்குத் தெளிவான கொள்கை எதுவும் கிடையாது.

இன்னும் சொல்லப்போனல் முரண்பாடுகளின் கலவையாக அவர்களின் நடவடிக்கைகள் அமைந்து வருகின்றன. இதனைச் சரியாக உணர்ந்துவிட்டால் இந்தி எதிர்ப்பில் அவர்களுக்கு இருக்கக்கூடிய மிகச் சொற்பமான ஆதரவாளர்களும் அகன்றுவிடுவார்கள் என்பது உறுதி.

திராவிட முன்னேற்றக் கழகம் இந்தியால் தமிழுக்கும், தமிழர்களுக்கும் ஆபத்து என்று பிரமாதப்படுத்தி, பொதுமக்களின் மனதைக் குழப்பத்திலாழ்த்தி இப்பிரச்னையின் மீது கட்சிக்கு உரமூட்டி உயிர்வாழ்ந்து காலந்தள்ள முனைந்திருக்கிறது.

தி. மு. க.வுக்கு தூபம் போடும் சுதந்திரக் கட்சியின் ஸ்தாபகரோ தன் கட்சிக்கு இந்தி பிரச்னை சம்பந்தமாக ஒரு வரையறுத்த கொள்கை கிடையாதென்று துணிந்து கூறுகிறார். இப்பிரசுரத்தின் பின்வரும் பகுதிகளைப் படிப்பவர்கள், காங்கிரசை எதிர்ப்பவர்களின் முரணான தடுமாற்றத்தையும், "இந்தி திணிப்பு" என கூக்குரலெழுப்பி இல்லாத ஒன்றை இருப்பதாக பூதங்காட்டி பயமுறுத்தி வருவதையும் உணருவார்கள்.

1957-ம் ஆண்டு, மே மாதம் ஆட்சிமொழி பற்றிய கேர் கமிஷன் அறிக்கை வெளி வந்தது. அந்த அறிக்கை இந்தியைச் சீக்கிரமாக மத்திய ஆட்சிமொழியாக்க வேண்டும் என்கிற சிபாரிசோடு கூடியதாக இருந்தது. மத்திய அரசாங்கம் கேர் கமிஷன் அறிக்கையை எல்லா ராஜ்யங்களுக்கும் அனுப்பி, அவற்றின் அபிப்பிராயங்களைக் கோரியது.

தமிழகத்தைப் பொறுத்தவரையில், அன்றையதினம் கல்வியமைச்சராகவிருந்த திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் மிகுந்த விவேகத்துடனும், நிதான உணர்வுடனும்

இந்தப் பிரச்னையில் நடந்து கொண்டார். சென்னை செக்ரடேரியட்டில் எல்லாக் கட்சித் தலைவர்களையும் கூட்டி இதுபற்றி விவாதித்தார். இது 1957-ம் ஆண்டு, நவம்பர் மாதத்தில் நடைபெற்றது.

## சர்வ கட்சி உடன்பாடு

அதற்குப் பிறகு மீண்டும் ஒருமுறை 10—12—57-ல் எல்லாக் கட்சித் தலைவர்களும், அறிஞர்களும் கூடி, தமிழக அரசாங்கத்தினர் மொழிப் பிரச்னை சம்பந்தமாகத் தயாரித்திருந்த அறிக்கையை விவாதித்தனர். மேற்குறிப்பிட்ட இரண்டு கூட்டங்களிலும் தி. மு. க. வின் சார்பில் திரு. அண்ணாதுரை கலந்துகொண்டார்.

தமிழக அரசினர் தயாரித்ததும், சட்டசபையிலிருந்த எல்லா எதிர்க்கட்சிகளின் பொது உடன்பாடு பெற்றதுமான அந்த அறிக்கை, மொழிப் பிரச்னை சம்பந்தமாக தமிழக காங்கிரசின் நிலையைத் தெளிவாகவும், சந்தேகத்துக்கு இடமற்ற வகையிலும் விளக்கியது.

## தமிழக அரசினரின் அபிப்பிராயங்கள்

கேர் கமிஷன் அறிக்கை பற்றிய தமிழக அரசினரின் அபிப்பிராயமாகவும் அது விளங்கியது. கேர் கமிஷன் அறிக்கை விரும்பியதுபோல, 1965-க்குப் பிறகு 'எங்கும்—எதிலும் இந்தி' என்ற கொள்கையை அது ஏற்றுக் கொள்ளவில்லை.

தமிழக அரசினர், சர்வ கட்சி பொது உடன்பாடோடு, தெரிவித்த சில மாற்றுக் கருத்துக்கள் இவை—

"1965 க்குப் பிறகு இந்தி மட்டும் ஆட்சிமொழியாக வேண்டும் என்பது சாத்தியமன்று. இந்த உண்மையை ஒப்புக்கொள்ள வேண்டும். தொடர்ந்து ஆங்கிலம் ஆட்சிமொழியாக இருந்து வரவேண்டும்."

"அரசியல் சட்டத்தைத் திருத்தாமலேயே ஆங்கிலம் தொடர்ந்து ஆட்சிமொழியாக இருந்து வருவதற்கு, தக்க மசோதாவை நிறைவேற்ற அரசியல் சட்டம் அனுமதியளிக்கிறது."

"இந்தி கட்டாய பாடமாக்கப்படக்கூடாது."

## பிரதேச மொழிக்கு முதலிடம்

"பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் வெவ்வேறு மொழிகள்—அதாவது தமிழும், இந்தியும்—போதன மொழிகளாக இருக்கலாம் என்ற கேர் கமிஷனின் கூற்று ஏற்கத்தக்கதன்று: கல்வியின் எல்லா நிலைகளிலும் பிரதேச மொழிதான் (அதாவது தமிழகத்தில் தமிழ்மொழிதான்) போதன மொழியாக இருக்க வேண்டும்."

"தமிழக ஆட்சிமொழி தமிழாகவே இருக்கும்."

"தமிழக சட்டமன்ற மொழி, உயர்நீதிமன்ற மொழி தமிழ்மொழியாகவே இருக்கும்."

"மத்திய ஆட்சிக்குத் தேவைப்படும் ஊழியர்களைத் தேர்ந்தெடுக்கும் சர்வீஸ் கமிஷன் பரீட்சைகள் இந்தியிலேயே நடைபெறலாம் என்றது கேர் கமிஷன் அறிக்கை. தமிழக ஆட்சி அதை ஒப்புக்கொள்ளவில்லை."

"சுப்ரீம் கோர்ட் நடவடிக்கைகளை இந்தி மொழியில் பிரசுரிப்பதென்றால் மற்ற பதின்மூன்று தேசிய மொழிகளிலும் அவற்றைப் பிரசுரிக்க வேண்டும்."

—மேலே தெரிவித்துள்ள யோசனைகளில் எவை தாய்மொழிக்கு ஊறுவிளைக்கக் கூடியவை? தயவுசெய்து, பாரபட்சமற்ற இதயத்தோடு சிந்தித்துப் பாருங்கள்.

## கௌஹாத்தியில் பெற்ற வெற்றி

மேற்குறிப்பிட்ட நடவடிக்கைக்குப் பிறகு, அதே மாதத்தில் அஸ்ஸாம் ராஜ்யத்தில் கௌஹாத்தியில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் மகாசபையில், திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள், மொழிப் பிரச்னையில் தெற்கிலே உள்ளவர்களின் உணர்ச்சிகளையும், கஷ்டங்களையும் எடுத்துக்காட்டி சொற்பெருக்காற்றினர். அந்த மகாசபை, ஆட்சிமொழிப் பிரச்னையில் நிதரிசனக் கண்ணோட்டமும், நிதானமும் அவசியமென்று வற்புறுத்தும் தீர்மானத்தை நிறைவேற்றியது.

இது, கட்சி அளவில், அகில இந்திய அடிப்படையில், தமிழகக் காங்கிரஸார் பெற்ற மாபெரும் வெற்றியாகும்.

## நேரு வழங்கிய உறுதிமொழி

அதற்குப் பிறகு, ஆங்கில மொழியை இந்திய தேசிய மொழிகளிலே ஒன்றாகச் சேர்க்க வேண்டும் என்ற தீர்மானம் பார்லிமெண்டில் திரு. பிராங்க் அந்தோணி என்ற உறுப்பினரால் கொண்டுவரப்பட்டது.

பார்லிமெண்டில் அந்தத் தீர்மானத்தின் மீது விவாதம் நடந்தபோது மறைந்த மனிதகுல மாணிக்கம் தலைவர் நேரு அவர்கள் பேசினர். அப்போதுதான் அவரது பிரசித்தி பெற்ற உறுதிமொழியை வழங்கினர்—அது நடந்தது 7—8—'58-ல்.

I believe in two things. There must be no imposition (of Hindi); secondly for an indefinite period, I do not know how long, English should continue as an associate or additional language------------

I would take it (English) as an alternative language so long as people require it and the decision on that I would not leave to the Hindi knowing people but to the non-Hindi knowing people.

—*"The Hindu" 8-8-58.*

மிகத் தெளிவாகவும், ஐயத்திற்கிடமில்லாத வகையிலும் முன்னாள் பிரதம மந்திரி அவர்கள் சொல்லிவிட்டார்.

## இந்தி பேசாதவரே தீர்மானிப்பர்

"நான் இரண்டு விஷயங்களை நம்புகிறேன். இந்திமொழித் திணிப்பு என்பது கூடாது; நீண்டகாலம் வரை ஆங்கிலம் துணைமொழியாகவோ, மாற்று மொழியாகவோ தொடர்ந்து இருந்துவர வேண்டும்.

"ஆங்கிலம் எவ்வளவு காலம் இருக்க வேண்டும் என்பதைத் தீர்மானிக்கின்ற பொறுப்பை இந்திமொழி பேசுபவர்களிடம் விடமாட்டேன்; இந்தி பேசாதவர்களிடமே இந்தப் பொறுப்பை விடுவேன்."

—இதுதான் நேரு அவர்களின் சரித்திரப் பிரசித்தி பெற்ற உறுதிமொழி. அந்த உறுதிமொழி தரப்படுவதற்கு முன்பு நடைபெற்ற விவாதத்தில் முன்னாள் மத்திய அமைச்சர் டாக்டர் சுப்பராயன் அவர்கள் கலந்துகொண்டு, நமது நிலையை மிகத் தெளிவோடும், தீரத்தோடும் எடுத்துக் காட்டினார். பார்லிமெண்டிலே அன்றைய தினம் வீற்றிருந்த தி. மு. க. பிரதிநிதிகள் வாய் திறந்ததாக வரலாறு இல்லை!

## காங்கிரஸே வழி காட்டியது

மேலே கூறப்பட்டுள்ள நிகழ்ச்சிகளைக் கோர்வையாகச் சிந்தனை செய்து பார்த்தால், ஒரு முக்கியமான உண்மை தெரியவரும்.

ஆட்சிமொழி சம்பந்தமாக நேரு அவர்கள், பார்லிமெண்டிலே உறுதிமொழி வழங்கியதற்குத் தமிழகக் காங்கிரஸார்தான் முழுக்க முழுக்கக் காரணம்.

வருங்காலச் சந்ததியினர், 'நாம் மொழிப் பிரச்னையில் விவேகம் மிகுந்த தலைவரான ஸ்ரீ காமராஜ் அவர்களால் சீரிய பாதையில் நடத்திச் செல்லப்பட்டோம்' என்று போற்றுவர்.

இந்த உறுதிமொழியைப் பற்றிப் பேசவோ பெருமை கொள்ளவோ திராவிட முன்னேற்றக் கழகத்திற்குத் துளிக்கூட அருகதையில்லை!

## இருமொழிக் கொள்கையை ஏற்றார்கள்!

1957-ம் ஆண்டு வரை இந்தி எந்த விதத்திலும் வரக் கூடாது என்று தி. மு. க. சொல்லி வந்தது. மத்திய ஆட்சிமொழியாக அரசியல் சட்டத்தில் ஒப்புக்கொள்ளப்

பட்டிருக்கின்ற இந்தி மொழியுடன், ஆங்கிலமொழியும் இருந்து வரவேண்டும் என்பதுதான் மேலே விவரிக்கப்பட்ட தமிழக அரசினரின் இருமொழிக் கொள்கையாகும். அதைத் திராவிட முன்னேற்றக் கழகம் ஒப்புக்கொண்டது.

தி. மு. க. தலைவரான திரு. அண்ணாதுரை தமிழக சட்டமன்றத்தால் 11—3—58-ல் ஆட்சிமொழிப் பிரச்னை மீது நடந்த விவாதத்தில் பேசியபோது, தமிழக அரசினரின் இருமொழிக் கொள்கையை ஒப்புக்கொண்டதாக அறிவித்தார்.

## ஒப்புதல் வாக்குமூலம்

"இன்றைய தினம் கிளம்பியிருக்கின்ற முக்கியமான கட்டம் சென்னை மாநில சர்க்கார் தயாரித்திருக்கிற அறிக்கையைப் பற்றியதாகும். 'ஜெனரல் அக்ரிமெண்ட்,' அதாவது பொதுஉடன்பாடு வேண்டுமென்ற காரணத்தால், திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பிலே நான் அந்தக் கமிட்டியிலே கலந்துகொண்டு அந்த அறிக்கைக்கு ஒப்பமும் அளித்திருக்கிறேன்."

—இவ்வாறு திரு. அண்ணாதுரை சட்டமன்றத்தில் ஒப்புக்கொண்டார்.

அதற்கு முன்பே, அவருடைய சொந்தப் பத்திரிகையாகிய "திராவிடநாடு" 14—8—60-ந் தேதிய இதழில், மொழிப் பிரச்னை பற்றி தமிழக அரசினர் தயாரித்த அறிக்கை எல்லாக் கட்சித் தலைவர்களிடமும் பொதுஉடன்பாடு பெற்றுத்தான் இந்திய அரசாங்கத்திற்கு அனுப்பப்பட்டது என்பதை அண்ணாதுரை ஒப்புக்கொண்டிருக்கிறார்.

## இந்தியை ஆட்சிமொழியாக்கியதில் பங்குண்டாம்

*30—8—1960*-ந் தேதியன்று, தி. மு. க. வின் அதிகார பூர்வமான நாளேடாகிய "நம் நாடு" இன்னும் ஒருபடி மேலே சென்று, இந்தியும் ஆங்கிலமும் சேர்ந்து மத்திய ஆட்சிமொழிகளாக இருக்க வேண்டும், என்ற இருமொழிக்கொள்கையை உருவாக்கியதில் தி. மு. க.வுக்கும் பங்கு உண்டு என்று தலையங்கமே தீட்டிற்று.

"இந்த இருமொழிக் கொள்கையை உருவாக்கியதில் ஆளும் காங்கிரஸுக் கட்சிக்கு மட்டுமே பங்கில்லை. தமிழக சட்டமன்றத்தில் இடம் பெற்றிருக்கின்ற கட்சிகள் அனைத்துக்கும் இம்முடிவில் பங்குண்டு.

"இம்முடிவில் சட்டமன்றத்தில் இடம் பெற்றிருக்கின்ற கட்சிகள் அனைத்துக்கும் பங்குண்டு என்கிறபோது, சட்டமன்றத்தில் இடம் பெற்றிருக்கின்ற நமது முன்னேற்ற கழகத்திற்கு மட்டும் இதில் பங்கில்லாமல் இருக்க முடியுமா? நிச்சயமாக உண்டு. கூடுதலாக இல்லை என்பதானாலும், ஆளும் காங்கிரஸுக் கட்சி உட்பட மற்ற அரசியல் கட்சிகளுக்கு இருக்கக்கூடிய அளவு பங்கு நமது முன்னேற்றக் கழகத்துக்கும் முக்காலும் உண்டு."

—இவ்வளவு அழுத்தந்திருத்தமாக, இந்தியும், ஆங்கிலமும் சேர்ந்து மத்திய ஆட்சி மொழிகளாக இருக்கும் திட்டத்தை உருவாக்கியதில், தனக்கும் பங்கு உண்டு என்று, தி.மு. க. தலைமைக் கழக ஏடு எழுதியிருக்கிறது!—

## ஆட்சிமொழிகள் மசோதா கூறுவதென்ன?

*1963*, ஏப்ரல் மாதம் பார்லிமெண்டில் நிறைவேற்றப்பட்ட ஆட்சிமொழிகள் மசோதா, மேற்படி திட்டத்தை அமுல் செய்வதற்கான நடவடிக்கைதான். இந்தியோடு ஆங்கிலமும் தொடர்ந்து மத்திய ஆட்சிமொழிகளாக இருக்க வேண்டும் என்று மசோதா தெளிவாகக் கூறுகிறது.

இதைத் திராவிட முன்னேற்றக் கழகம் ஏன் எதிர்க்க வேண்டும்? எதை அது ஆதரித்ததோ, எந்தக் கொள்கையை உருவாக்கியதில் தனக்குப் பங்கு உண்டு என்று அது வற்புறுத்தியதோ, அதுதானே நிறைவேறியிருக்கிறது!

இதற்கு எதிர்ப்பு ஏன்? கிளர்ச்சி ஏன்? ஆர்ப்பாட்டம் ஏன்?

## மசோதாவினால் நன்மைகள்

ஆட்சிமொழிகள் மசோதா *1965*-க்குப் பிறகும் ஆங்கிலம் தொடரும் என்பதற்கான வழிமுறைகளை வகுத்தது.

இரண்டாவதாக, காலக்கெடு எதுவும் அந்த மசோதாவில் சொல்லப்படவில்லை. *1975* அல்ல; *2000* அல்ல; அந்த ஆண்டுக்குப் பிறகும் ஆங்கிலம் தொடர்ந்து ஆட்சி மொழியாக இருக்கக் கூடும். மசோதா அந்த வாய்ப்பைத் தடை செய்யவில்லை.

மூன்றாவதாக, பத்து ஆண்டுகளுக்குப் பிறகு பல மொழிகளைப் பேசும், பல்வேறு ராஜ்யங்களைச் சேர்ந்தவர்களைக் கொண்ட பார்லிமெண்டரி கமிட்டி, இது குறித்து விவாதிக்கவும் மசோதா வழி வகுத்திருக்கிறது.

## நம்மைக் கேட்காமல் முடிவு செய்யமாட்டார்கள்

நான்காவதாக - மிக முக்கியமாக அந்த நிலையில் மேற்கொண்டு எடுக்க வேண்டிய நடவடிக்கைகளைப் பற்றி ராஜ்ய அரசாங்கங்களின் அபிப்பிராயங்களையும் கேட்பார்கள்; கேட்டுத்தான் முடிவு செய்வார்கள்.

இவ்வளவு தெளிவாகவும், இந்தி பேசாத மக்களுக்குச் சாதகமாகவும் உள்ள மசோதாவை தி. மு. க. எதிர்க்கத் துணிந்துவிட்டது! (இந்தி பேசாத மக்களிடம் அதற்குள்ள விசேட அக்கறையும், பரிவும் புலனாகின்றதா?)

## எலியும் தவளையும் கூடின!

திரு. லால்பகதூர் சாஸ்திரி அவர்கள் கொண்டு வந்த ஆட்சிமொழிகள் மசோதாவை எதிர்க்கும் வகையில், 29—4—63 அன்று மாலை சென்னை கடற்கரையில் பெரிய பொதுக்கூட்டமொன்று திரு. கே. பாலசுப்பிரமணிய அய்யர் தலைமையில் நடைபெற்றது. அதில் ராஜாஜி, அண்ணாதுரை, என். சிவராஜ், அப்துல்சமத் ஆகியோர் பேசினர்.

## ஆங்கிலம் என்றென்றும் இருக்க வேண்டுமாம்

அக்கூட்டத்தில், ஆங்கிலம் மத்திய ஆட்சிமொழியாக என்றென்றும் நீடிக்க வேண்டும் என்று வற்புறுத்தும் தீர்மானம் ஆங்கிலத்தில் படிக்கப்பட்டு, ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

தி. மு. க. முன்பு ஒப்புக்கொண்ட இருமொழித் திட்டத்தை, இத்தீர்மானத்தின் மூலம் கைவிட்டுவிட்டது! அதனுடைய பல பல்டிகளில் இது முக்கியமான ஒன்று!

தமிழர்களிடையே, தமிழர்கள் பேசிய மேற்படி கூட்டத்தில், தீர்மானம் ஆங்கிலத்தில் நிறைவேற்றப்பட்டது ஒன்றே போதும், தி. மு. க. வின் ஆங்கில மோகத்தை எடுத்துக்காட்ட, தமிழ்மொழியை அக்கழகம் அவமதிப்பதைச் சுட்டிக்காட்ட!

## பதினான்கு மொழித் திட்டம்

அதற்குப் பிறகு, அதே ஆண்டு, ஜூன் மாதம், சென்னையில் திராவிட முன்னேற்றக் கழகத்தின் பொதுக்குழு கூடியது. அது கழகத்தின் அதிகார பூர்வமான மிகப் பெரிய அமைப்பாகும். அங்கு தி. மு. க. மீண்டுமொருமுறை பல்டி அடித்தது.

"அரசியல் சட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பதினான்கு தேசிய மொழிகளும் இந்தியாவின் ஆட்சிமொழிகளாக வேண்டும்."

இவ்வாறு மேற்படி பொதுக்குழு தீர்மானம் நிறைவேற்றியது! அரசியல் சட்டம் குறிப்பிடும் பதினான்கு தேசிய மொழிகள் இவை :—

| | |
|---|---|
| அஸ்ஸாமி | மராத்தி |
| வங்காளி | ஒரியா |
| குஜராத்தி | பஞ்சாபி |
| இந்தி | தமிழ் |
| கன்னடம் | தெலுங்கு |
| காஷ்மீரி | உருது |
| மலேயாளம் | சம்ஸ்க்ருதம் |

தி. மு. க. பொதுக்குழு நிறைவேற்றிய தீர்மானமே ஒரு பெரிய பல்டி என்றால், அதற்குள் பல முரண்பாடுகள் முடங்கிக் கிடப்பதைக் காணலாம்.

## ஆங்கிலத்தை விட்டுவிட்டார்கள்

தி. மு. க. தீர்மானித்துள்ள இந்தப் பதினன்கு மொழிகளில் ஆங்கிலம் இல்லை! ஆகவே, ஆங்கிலம் ஆட்சிமொழியாக இருக்க வேண்டும் என்ற கோரிக்கையைக் கை கழுவி விட்டது தி. மு. க! அதேசமயத்தில் இந்திமொழி மட்டும் ஆட்சிமொழியாக ஒப்புக் கொண்டது!

## சம்ஸ்கிருதம் ஆட்சிமொழியாக வேண்டுமாம்

மேற்படி பதினன்கு மொழிகளில் சம்ஸ்கிருதம் ஒன்று. அது வழக்கொழிந்த மொழி; மக்களால் பேசப்படுவது அல்ல. கடந்த காலத்தில் சம்ஸ்கிருதத்தை தி. மு. க. கடுமையாக எதிர்த்து வந்திருக்கிறது. ஆலயத்தில் ஆண்டவனைத் துதிக்கும் மொழியாகக் கூட அது இருக்கக்கூடாது என்பது திராவிட வட்டாரத்தின் நிலை. ஆனால், ஜூன் மாதத்தில் கூடிய தி. மு. க. தலைவர்கள், சம்ஸ்கிருதத்தை இந்தியாவின் ஆட்சிமொழியாகவே ஆக்க வேண்டும் என்று தீர்மானித்துவிட்டார்கள்! எவ்வளவு 'விவேகம்'! எத்தகைய பல்டி!!

இன்னொன்று. மேற்குறிப்பிட்டுள்ள பதினங்கு மொழிகளில் ஏழு மொழிகளைத் தவிர மற்றவை மிகக் குறைந்த அளவு மக்களாலேயே பேசப்படுபவை. அவற்றையெல்லாம் ஆட்சிமொழிகளாக்குக, என்கிறது தி. மு. க. தீர்மானம்!

## பைத்தியக்கார விடுதியாக வேண்டுமா?

பதினான்கு மொழிகளும், தி. மு. க. சொல்லுவதுபோல், மத்திய ஆட்சிமொழிகளானால், ஒவ்வொரு அலுவலகத்திலும் எவ்வளவு காலதாமதமும் குழப்பங்களும் ஏற்படும்? எவ்வளவு காசு வீணாகும்? எவ்வளவு மொழிபெயர்ப்பாளர்கள் தேவைப்படுவார்கள்? கசப்புணர்ச்சியும், வெறுப்பும் எந்த அளவுக்கு ஏற்படும்? அலுவலகம் ஒரு நாளாவது நிம்மதியாக இயங்குமா?

இவற்றையெல்லாம் கருதித்தான் 'குமுதம்' ஏடு தி. மு. க. வின் பதினான்கு மொழித் திட்டம் நிறைவேறினால், இந்த நாடே ஒரு பைத்தியக்கார விடுதியாகிவிடும் என்று குறிப்பிட்டது!!

## இதோ ஒரு குழப்பவாதி!

இவ்வளவு குழப்பங்களும் போதாதென்று பார்லிமெண்டிலுள்ள தி. மு. க. உறுப்பினரான திரு. மனோகரன் "தி. மு. கழகம் இந்தி மொழியை எதிர்ப்பதாகக் கூறுவது தவறு. இந்தி மொழியை நாங்கள் வெறுக்கவில்லை. பள்ளிகளில் இந்தியை வலுக்கட்டாயமாகத் திணிப்பதைத்தான் நாங்கள் எதிர்க்கிறோம்" என்று பார்லிமெண்டில் பேசியதாக 25—4—63-ந் தேதிய 'நம் நாடு' தெரிவித்தது.

பொறுப்புணர்ச்சி உள்ள அரசியல் தலைவரொருவர் பேசுகின்ற பேச்சா இது? சென்னையிலே 'இந்தி ஒழிக—எந்த வகையிலும் இந்தி வரக்கூடாது' என்று பேசுவது; டில்லியில் அதற்கு நேர்மாறாக வளைந்து கொடுத்து, 'இந்தியை நாங்கள் எதிர்க்கவேயில்லை' என்று ஒரே போடாகப் போடுவது—இது எந்த வகையான வீரம்?

## கட்டாய இந்தி எங்கே?

கட்டாயமாக இந்தியைத் திணிப்பதைத்தான் தி. மு. க. எதிர்ப்பதாக மனோகரன் கூறுகிறார். மெத்த சரி. தமிழகத்தில் இன்றுள்ள நிலைமையென்ன—மயக்கம் நீங்கிப் பார்ப்பாரா மனோகரன்? இந்தி இங்கே கட்டாயமில்லை. அப்படியிருக்க, வெறும் உரலை தி. மு. க. எதற்காக இடிக்கிறதாம்?

அது ஒருபுறமிருக்கட்டும். தி. மு. க. நிர்வாகத்திலுள்ள சென்னை மாநகராட்சி உயர்நிலைப்பள்ளிகளில் இந்தி கட்டாய பாடமாக இருப்பதேன்? ஊருக்கு உபதேசம் அவர்களுக்குக் கிடையாதோ?

## தமிழ் மொழிக்கு ஆபத்தா?

இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி ஏன் தெரியுமா, என்று விளக்க வந்த "நம் நாடு", தமிழ் மொழிக்கு வந்துள்ள ஆபத்தை அகற்றவே இந்தப் போராட்டம் என்று கூறுகிறது. இது உண்மையா?

தமிழகத்தைப் பொறுத்தவரையில் பிரச்னை 'தமிழா—இந்தியா' என்பதல்ல. பிரச்னை தமிழா அல்லது ஆங்கிலமா என்பதுதான். இன்றைய தமிழக அரசினர் பிரதேச மொழியே ஆட்சிமொழியாக விளங்க வேண்டும் என்ற அழுத்தமான கொள்கையுடைய வர்கள். உண்மையான ஜனநாயகமும், சோஷலிச அமைப்பும் அப்போதுதான் உறுதியாக அமையும் என்று அவர்கள் திடமாக நம்புகிறார்கள். எனவே, தமிழக ஆட்சிமொழி தமிழ் தான் என்பதை அவர்கள் ஏற்றுக்கொண்டுள்ளனர்.

## உணர்ந்தே பொய் சொல்லுகிறார்கள்

எனவே, மாகாண அளவில் இந்தி மொழியால் தமிழுக்கு ஆபத்து ஏற்பட வழியேதும் இல்லை. இருப்பதாகக் கூறுவது அறியாமை.

மத்திய ஆட்சியைப் பொறுத்தவரையில், பிரச்னை 'தமிழா—இந்தியா' என்பதன்று. அங்கும் பிரச்னை 'இந்தியா—ஆங்கிலமா' என்பதுதான். ஆகவே, இந்தி வந்தால் தமிழ் அழியும் என்று திராவிட முன்னேற்றக் கழகம் பேசுவது உணர்ந்தே உரைக்கப்படும் பொய்.

## முன்னாள் தீவிரவாதியின் முரண்பாடுகள்

இனி, ராஜாஜியை எடுத்துக் கொள்ளுவோம். இன்றைய இந்தி எதிர்ப்பு இயக்கத்திற்கு அவரே தலைவராக விளங்குகிறார். அவரது கடந்தகால நடவடிக்கைகள் சிலவற்றை எண்ணிப்பார்த்தால்—அவர் அவற்றை நினைத்துப் பார்ப்பதே இல்லையோ?—எவருக்கும் அவர்மீது நிச்சயமாகக் கோபம் வரத்தான் செய்யும்.

காங்கிரஸ் மகாசபை இந்திதான் இந்தியாவின் பொதுமொழி என்ற கொள்கையை ஏற்றபோது அதற்கு ஆதரவளித்த தீவிரவாதிகளுள் ராஜாஜி முதலாமவர். ஆதரவைச் செயல்படுத்தும் வகையில் தென்னிந்தியா முழுவதும் இந்தியைப் பரப்ப அவர் பொறுப்பேற்றார்: 'இந்தி பிரசார சபை'யின் தலைவராக இருந்தார். இந்திப் பிரசாரத்திற்காகவே காந்தி அடிகளின் புதல்வர் தேவதாஸ் காந்தியைத் தமிழ்நாடு சுற்றுப்பயணத்திற்கழைத்தார்.

## தீவிரமாக இந்தியைப் பரப்பியவர்

1937-ல் அவர் பதவியேற்றபோது இந்திமொழியைப் பள்ளிகளிலே கட்டாய பாடமாக்கினார். எதிர்த்தவர்களைக் கடுமையாக அடக்கினார்.

பின்னர், இந்தியா விடுதலை பெற்றதும், கவர்னர் ஜெனரலாக இருந்த ராஜாஜி, இந்தி பேசாத பகுதிகளைச் சேர்ந்த அரசியல் நிர்ணயசபை உறுப்பினர்களுக்கு இந்தியை ஆட்சிமொழியாக ஏற்கலாம் என்று ஆலோசனை கூறினார்.

## சட்டத்திற்கு அங்கீகாரமளித்தார்

கவர்னர் ஜெனரல் என்ற வகையில், இந்திதான் இந்தியாவின் ஆட்சிமொழி என்று கூறும் அரசியல் சட்டத்திற்குத் தம் கையொப்பமிட்டு அங்கீகாரம் அளித்தவர் ராஜாஜி.

அன்றைய கவர்னர் ஜெனரலுக்கு நிறைய அதிகாரங்கள் இருந்தன. இந்தி, இந்தியாவின் ஆட்சிமொழியாகக் கூடாது என்று ராஜாஜி அந்தரங்கசுத்தியாகக் கருதியிருந்தால், அன்று அவருக்கிருந்த அதிகாரங்களைப் பயன்படுத்தி, அரசியல் சட்டத்தில் கையெழுத்திட மறுத்திருக்கலாம். அவ்வாறு அவர் செய்யவில்லை. 1965-ல் இந்தி ஆட்சிமொழியாகும் விதியோடு கூடிய அரசியல் சட்டத்தில் கையொப்பமிட்டுவிட்டார்!

## செய்வதைச் செய்துவிட்டு இன்று கழுத்தறுப்பதா?

1952-ல் ராஜாஜி மத்திய அரசாங்க உள்துறை அமைச்சராக இருந்தபோது, அவருடைய இலாகாவைச் சேர்ந்தவர்கள் இந்தியைக் கட்டாயமாகப் படிக்க வேண்டும் என்று சுற்றறிக்கை அனுப்பியதாக திரு. லால்பகதூர் சாஸ்திரி பார்லிமெண்டில் எடுத்துக்

காட்டினர். அதாவது, 1952-லேயே மத்திய அரசாங்க உத்தியோகஸ்தர்கள் கட்டாயமாக இந்தியைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று உத்தரவு போட்டவர் ராஜாஜி.

இவ்வளவும் செய்துவிட்டு, இன்று இந்தியை எதிர்க்கிறேன் என்று கிளம்பியிருக்கிறார் அவர்! வேதனையூட்டும் விசித்திரமான மனிதர்!

## எவ்வழி அவர் வழி எவரறிவார்?

ராஜாஜி எது சொன்னாலும் நாம் கேட்க வேண்டும். அவர் இந்திமொழியைப் படி என்பார்; நாம் உடனே, மற்ற அலுவல்களையெல்லாம் ஒதுக்கிவிட்டு, 'பச்சோங்கி கிதாப்'பை எடுத்துக்கொள்ள வேண்டும்.

'பிரத்தியட்சக் கண்ணோட்டத்தோடு பிரச்னையை அணுக வேண்டாமா?' என்று எவரேனும் கேட்டால், 'உனக்கு ஒன்றும் தெரியாது; மூடு வாயை; உட்கார் மூலையில். என்பார். கப்சிப் என்று அடங்கிக் கிடக்க வேண்டும்.

திடீரென்று அவர் மாறிவிடுவார். இந்தி வேண்டாம் என்பார் உரத்த குரலில்' நீங்கள்தானே இந்தி வேண்டும் என்று சொன்னீர்கள் என்று கேட்டால், 'அதெல்லாம் விளக்கம் கேட்காதே. இந்தி வேண்டாம் என்றால் அவ்வளவுதான், ஆங்கிலமே போதும்' என்று அதட்டுவார். அதற்கும் நாம் ஒப்புக்கொள்ள வேண்டும்! சுருக்கமாக, அவர் இழுத்த இழுப்புக்கெல்லாம் மக்கள் ஓட வேண்டும்; இது சரியா, முறையா என்று கேட்கக் கூடாது!!

## இப்போதும் அதே கதைதான்

பழங்கதை தெரிந்ததுதானே, விட்டுத்தள்ளுங்கள், என்று பெருந்தன்மையோடு ஒருசிலர் கூறிடக் கூடும்.

நிகழ்காலத்தில் மட்டுமென்ன, ஆட்சிமொழிப் பிரச்னை பற்றி, ராஜாஜி ஒரேவிதமான அபிப்பிராயத்தையா கூறி வருகிறார்?

அவரால் எழுதப்பட்ட 'ஆங்கில மொழிப் பிரச்னை' என்ற நூல் 1962-ம் ஆண்டு, ஆகஸ்ட் மாதம் அவரது கையொப்பமிட்ட முன்னுரையோடு வெளியிடப்பட்டது— அதாவது மிகத் தீவிர இந்தி எதிர்ப்பாளராக ராஜாஜி ஆன பிறகு. அதில் 1956 முதல் 1962 வரை பல ஏடுகளில் அவர் எழுதிய கட்டுரைகள் உள்ளன.

## இவரா வழிகாட்டக் கூடியவர்?

அவற்றைப் படித்துப் பார்த்தால், அவற்றினிடையே உள்ள முரண்பாடுகளைக் கூர்ந்து கவனித்தால், இவரா மொழிப் பிரச்னையில் வழிகாட்டியாக இருக்கக்கூடியவர் என்ற ஐயம் எவருக்கும் எழாமல் இராது.

1. இந்தி மொழிதான் இந்தியாவின் தேசிய மொழியாக ஆகக்கூடிய நிலையிலுள்ளது என்கிறார் 1-ம் பக்கத்தில். அதை அழுத்தந்திருத்தமாக உறுதிப்படுத்துகிறார் 11-ம் பக்கத்தில். தேசிய மொழியாகிய இந்தி மட்டும் மத்திய ஆட்சி மொழியாக ஆவதற்குப் போதிய அவகாசம் தேவை; இடைக் காலத்தில் இதுவரையில் இருந்து வந்துள்ள ஆங்கில மொழி தொடர்ந்து ஆட்சி மொழியாக இருக்கட்டும் என்று காலகெடு வைத்து வாதாடுகிறார் 7, 8 பக்கங்களில்.

இவ்வளவும் சொல்லிய பிறகு, இந்தியாவில் ஒரே ஒரு தேசிய மொழி என்பது எப்போதுமே ஏற்பட முடியாது என்று 51-ம் பக்கத்தில் தம்மையே மறுத்துக் கொள்ளுகிறார்!

## எவ்வளவு முரண்பட்ட கருத்துக்கள்!

2. ஆங்கிலம் தொடர்ந்து ஆட்சி மொழியாக இருக்கும் வகையில் மசோதா நிறைவேற்றப்பட வேண்டும் என்று 2-ம் பக்கத்தில் கூறியவர், அதற்கு நேர்மாறாக, அரசியல் சட்டத்தின் பதினேழாவது பகுதியையே நீக்கிவிட வேண்டும் என்று 24-ம் பக்கத்தில் வாதாடுகிறார்!

3. மத்திய ஆட்சி மொழிகளாக ஆங்கிலமும் இந்தியுமோ அல்லது இரண்டில் ஏதாவதொன்றோ இருக்க வேண்டும் என்று 4-ம் பக்கத்தில் கூறுகிறார்.

மத்திய ஆட்சி மொழிகளாக இந்தியும், ஆங்கிலமும் சேர்ந்து இயங்குவதைவிடச் சிறந்த முறை வேறு எதுவும் இருக்க முடியாது என்று மிகவும் உறுதியாக 14-ம் பக்கத்தில் வாதாடுகிறார்.

இந்தியும் ஆங்கிலமும் சேர்ந்து ஆட்சி மொழிகளாக இருப்பது என்ற இருமொழிக் கொள்கை ஒரு வலை, அதில் சிக்கக்கூடாது என்று 65-ம் பக்கத்தில் கூறுகிறார்.

முக்கியமானதொரு பிரச்னையில் எத்தகைய மாறுபட்ட அபிப்பிராயங்கள்!!

## ஏன் இந்தக் கபட மொழிகள்?

இருமொழிக் கொள்கை ஒரு வலை, இந்தி கூடாது, என்பதுதான் ராஜாஜியின் கருத்தாக இருக்குமானால் (இந்தக் கருத்தாவது நிரந்தரமாக இருக்குமா?) "தென்

னிந்தியர்களே, புத்திசாலிகளாக இருங்கள், இந்தியைக் கற்றுக் கொள்ளுங்கள், அதன் மூலம்தான் இந்தியக் குடிமகன் என்ற உங்களுடைய தகுதி முழுமைப்படும்'' (பக்கம்-6) என்று உபதேசம் செய்கிருரே அது ஏன்?

''ஆங்கிலம் ஆட்சிமொழியாகத் தொடர்ந்து இருப்பதால், அமைதியாகவும், இயற்கையாகவும் இந்தி நுழைவதை அது தடுக்காது'' என்று 17-ம் பக்கத்தில் அபயம் அளித்திருக்கிருரே, அது எதற்காகவாம்?

## அவருடைய கட்சியே அவரை எதிர்க்கிறது

''இந்தி மொழியைப் பரப்பிய பிறகு, அதைமட்டும் ஆட்சிமொழியாக்கச் சம்மதம் பெறலாம்'' (19-ம் பக்கம்) என்று ஆலோசனை வழங்கியிருக்கிருரே, அது ஏன்?

''மொழிப் பிரச்னை பற்றி நான் கொண்டுள்ள கருத்து என் சொந்த அபிப்பிராயமே தவிர, சுதந்திரக் கட்சியின் கருத்து அல்ல'' (பக்கம்-58) என்று கூறியிருக்கிருரே. கட்சியின் ஆதரவு இல்லாமல் இவர் அபிப்பிராயம் செயல்படுவது எவ்வாறு?

சுதந்திரக்கட்சி பதவிக்கு வருமானல்—நிச்சயமாக வராது—மொழிப் பிரச்னை சம்பந்தமாக என்ன கொள்கையைப் பின்பற்றும்? இவருடைய கொள்கையைப் பின் பற்றுது என்பது இப்போதே தெரிந்துவிட்டது!! இந்த இலட்சணத்தில் இவர் ஊருக்கு வழிகாட்ட வருகிருரா?

## அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டுமா?

ஆட்சிமொழிப் பிரச்னை தீர, அரசியல் சட்டம் பதினேழாவது பிரிவையே எடுத்து விட வேண்டும், அதற்கேற்ப அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டும் என்று இன்றைய

ராஜாஜி கூறுகிருர். அப்படித்தான் செய்ய வேண்டும் என்று அவருடைய புதுமுகங்களான தி. மு. க.வினரும் கூறுகிருர்கள்.

அரசியல் சட்டம் திருத்தப்படுவது அவசியம் இல்லே. மசோதா கொண்டு வந்து நிறைவேற்றுவதன் மூலம் பிரச்னையைத் தீர்க்கலாம் என்பது தமிழக அரசினரின் நிலே.

## நடக்கக்கூடிய யோசனையா?

இவற்றிலே எது, காரிய சாத்தியமான யோசனே? ராஜாஜி கூறுவதுபோல அரசியல் சட்டத்தைத் திருத்துவதற்குப் பார்லிமெண்டில் மூன்றில் இரண்டு பங்கு வாக்குகள் தேவை. தமிழக அரசினர் விரும்புவது போல மசோதா கொண்டு வந்து நிறைவேற்ற ஒரு வாக்கு மெஜாரிட்டி இருந்தாலே போதும். எது சுலபமானது, இவற்றில்?

பாருங்கல்லேக் காட்டி, 'இதிலே தலேயை வேகமாக முட்டிக் கொள், பாறை உடையும், வழி கிடைக்கும்' என்று கூறுவது போல, இயலாத வழியைக் காட்டுகிருர் ராஜாஜி. மக்கள் ஏமாறுவார்களா?

## ராஜாஜியும், அண்ணாதுரையும் ஒரே போக்கினராம்

*1963*-ம் ஆண்டு, செப்டம்பர் மாதம், 9-ந் தேதியன்று சென்னே சட்டக் கல்லூரி தமிழ் மாணவர்கள் பேரவையின் சார்பில், நடைபெற்ற ஆட்சிமொழிக் கருத்தரங்கில் ராஜாஜியும், அண்ணுதுரையும் பேசினர்.

"ராஜாஜிக்கும் எனக்கும் பல பிரச்னைகளில் கருத்து மாறுபாடு இருப்பினும், இந்தி எதிர்ப்புப் பிரச்னையில் நாங்கள் இருவரும் ஒரே கருத்து கொண்டிருக்கிருேம். எனது கருத்துக்களுக்கு ராஜாஜி பெருந்துணையாக இருக்கிருர்."

—இவ்வாறு அங்கே பேசுகையில் அண்ணாதுரை குறிப்பிட்டார். இக்கூற்று சரியா? இந்தி எதிர்ப்புப் பிரச்னையில் அவர்கள் இருவரும் ஒரேவிதமான கருத்துடையவர்களா?

**'ஒற்றுமை'களைப் பாருங்கள்!**

இந்தி ஆட்சி மொழியானால் ஆங்கிலம் பாதிக்கப்படும். ஆகவே இந்தியை எதிர்க்கிறேன் என்கிறார் ராஜாஜி. இந்தி ஆட்சி மொழியானால் தமிழுக்கு ஆபத்து, ஆகவே, இந்தியை எதிர்க்கிறோம், என்கிறது தி. மு. க. 'இந்தியால் தமிழுக்கு ஆபத்து இல்லை' என்று அடித்துச் சொல்லுகிறார் ராஜாஜி! இது ஒற்றுமையா?

இந்தி மொழியைப் பள்ளிக்கூடத்தில் விருப்பப் பாடமாகக்கூட வைக்கக்கூடாது என்கிறது தி. மு. க. இந்தி பள்ளிக்கூடத்தில் கட்டாய பாடமாகக் கற்றுத் தரப்பட வேண்டும் என்று இன்று வரை சொல்லி வருகிறார் ராஜாஜி. இதுவும் ஒற்றுமையா?

இந்தி வந்தால் நாடு பிரியும்: ஆகவே இந்தியாவின் ஒற்றுமையைக் காப்பதற்காக, இந்தியை எதிர்க்கிறேன் என்கிறார் ராஜாஜி. நாங்கள் பிரிவினையைக் கோருகிறோம். பிரிந்து போகும் எங்களுக்கு இந்தி எதற்கு, ஆகவே இந்தியை எதிர்க்கிறோம், என்கிறது தி. மு. க.! இதுகூட ஒற்றுமைதானா?

என்றென்றும் ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருந்து வரவேண்டும் என்கிறார் ராஜாஜி. தி. மு. க. வின் பொதுக்குழு, பதினான்கு மொழிகள் இந்திய ஆட்சி மொழிகளாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்துள்ளது. இதுவும் ஒற்றுமையைத்தான் காட்டுகிறதா?

## யாருக்கு யார் வழி காட்டுவது?

இந்த இலட்சணத்தில், 20—4—63 அன்று சென்னை இலட்சுமிபுரம் யுவர் சங்கம் நடத்திய ஆட்சி மொழி பற்றிய கூட்டத்தில் தி. மு. க. தலைவரான திரு. மு. கருணாநிதி, ராஜாஜியைப் பார்த்து "நல்லவரோ வல்லவரோ இந்த நாடு வாழ, மீள வழி காட்டுங்கள்" (முரசொலி 24—4—63) என்று கேட்டுக் கொண்டார்!!

யாருக்கு யார் வழி காட்டுவது? அவர் வழிவேறு, வழி காட்டுங்கள் என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டவருடைய வழி வேறு. எப்படி அவர் இவருக்கு வழிகாட்ட முடியும்—ஒரு குருடனுக்கு இன்னொரு குருடன் வழிகாட்ட இயலுமா?

## இவர்களால் நாட்டுக்கு வழிகாட்ட முடியுமா?

மொழிப் பிரச்னையில் தி. மு. க.வினருக்கும், ராஜாஜிக்கும் எவ்வளவு குழப்பம்—எவ்வளவு தெளிவற்ற போக்கு—பார்த்தீர்களா?

இந்த வீராதி வீரர்கள் தான் இந்தி எதிர்ப்புப் போராட்டம் நடத்துகிறார்களாம்! நாடு நகைக்கிறது இவர்களைப் பார்த்து!! நிரந்தரமான கொள்கையற்ற இவர்களைப் பின்பற்றினால் ஆபத்துத்தான் வரும்.

கட்சி இருப்பதாக நினைவுறுத்தி வர, இளைஞர்களை உணர்ச்சியுடன் வைத்துவர, போராட்டம் போராட்டம் என்று சொல்லி வந்த நிலையிலின்றும் பின்வாங்கத் தயங்கி, தி. மு. க. தலைவர்கள் தங்களுக்கே குழப்பமும் தயக்கமும் இஷ்டமில்லாமலும் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தை நடத்துகிறார்கள். இந்நிலையினின்றும் வெற்றிகரமாய்ப் பின்

வாங்குவதற்குச் சாக்குப் போக்காக ஏதேனும் ஒரு புதிய நெருக்கடி நிலை நாட்டில் உருவாகாதாவென்று ஏங்கி நிற்கிறார்கள். இதுதான் தி. மு. க.வின் இன்றைய பரிதாப நிலை!

## காங்கிரசின் கொள்கையென்ன?

காங்கிரஸ் மகாசபை, இந்தி மொழி இந்தியாவின் ஆட்சிமொழியாக வேண்டும் என்ற கருத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறது. சுதந்திரம் பெற்ற பாரதத்தில் நமது மொழிகளுள், பெரும்பான்மையான மக்களால் பேசப்படும் மொழியாகிய இந்திதான், ஆட்சிமொழியாக விளங்கவேண்டும். தமிழகத்தில் தமிழ்தான் ஆட்சிமொழியாக இருக்கவேண்டும்.

அப்போதுதான் இந்தியாவின் ஒருமைப்பாடு பூர்த்தியாகும். நமது மொழிகளுள் ஒன்று ஆட்சி மொழியாக இருந்தால்தான் இந்திய மொழிகள் அனைத்தும் நன்கு வளர முடியும்.

இந்தி மொழி, இந்தியாவை இணைக்கும் கருவியாக விளங்கும் என்றார் காந்தியடிகள். அவருடைய விருப்பப்படியே அம்மொழி ஆட்சிபீடத்தில் அமரும்.

## ஜனநாயக முறைப்படியே தீர்மானிப்பார்கள்

மும்மொழிக் கொள்கையை அமுல் நடத்தும் மற்ற ராஜ்யங்கள் இந்தியைக் கட்டாய பாடமாக வைத்துள்ளன. தமிழகத்தில் இந்த நிலை இல்லை. அங்கு பிரதேச மொழியாகிய தமிழ் மொழியுடன் இந்தியைக் கட்டாய பாடமாக படிக்க வேண்டியது

இல்லை. மாணவர்கள் விரும்பினுல் இந்தி மொழியைக் கற்கலாம். அல்லது தெலுங்கு, குஜராத்தி, மலையாளம் போன்ற இதர மொழிகளுள் ஏதாவதொன்றைப் படிக்கலாம். இதில் இந்தி திணிப்பு எங்கிருந்து வருகிறது?

தமிழக அரசினரின் இந்த நிலையை மத்திய அரசாங்கம் சரியென்று ஒப்புக்கொண்டிருக்கிறது என்பதையும் இங்கே கவனிக்க வேண்டும்.

இந்தியை யாரும் திணிக்க மாட்டார்கள். திணிக்கும்படி நமது தலைவர்கள் விட்டுவிட மாட்டார்கள். இந்தி மொழியை நாமனைவரும் நன்ருகக் கற்று உணரும் வரையில், ஆங்கிலமும் மத்திய ஆட்சி மொழியாக இருந்து வரும். இந்தி பேசாத ராஜ்யங்களைச் சேர்ந்த மக்களின் விருப்பத்தை ஒட்டியே ஆட்சி மொழிப் பிரச்னையைத் தீர்ப்பார்கள். அதில் எவருக்கும் ஐயம் வேண்டாம்.

---

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி (54, ஜெனரல் பேட்டர்ஸ் ரோடு, சென்னை-2) வெளியீட்டுத்துறைக்காக திரு கருப்பையா அவர்களால் எழுதப்பட்டது. 10—7—64

